21st January 1961]

**THE HON. SRI C. SUBRAMANIAM :** சென்ற ஆண்டுவரையிலும் இப்போது இருக்கக்கூடிய கல்லூரிகளிலேயே போதுமான அளவு மாணவர்கள் வந்து சேரவில்லை. ஆனால், இந்த ஆண்டு கொஞ்சம் நிலைமை சீரடைந்து உள்ளது. ஆண்களுக்கு இருக்கக்கூடிய இடம் 965. ஆனால் 942 பேர்கள் தான் சேர்ந்திருக்கிறார்கள். இருபத்திமூன்று இடம் பாக்கியிருக்கிறது. அதுபோல் பெண்களுக்கு இருக்கக்கூடிய இடம் 400. அதில் 376 பேர்கள் தான் சேர்ந்திருக்கிறார்கள். இன்னும் 24 இடம் பாக்கியிருக்கிறது. இப்போது சம்பள உயர்வு கொஞ்சம் அதிகம் கொடுத்திருக்கின்ற காரணத்தினாலே, இந்த ஆண்டு அதிகம் பேர்கள் சேர்ந்திருக்கிறார்கள். இப்போது இருக்கக்கூடிய எல்லா இடங்களுக்கும், வருஷா வருஷம் சேர்ந்து விடுவார்களேயானால், நிலைமை சீரடைந்து விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

*Kattalai Pullambadi canals*

*** 74 Q.—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கட்டளை, புள்ளம்பாடி கால்வாய்கள் கட்டும் வேலை முடிந்து விட்டதா?

(இ) இதுவரை அவ்வேலையில் அமர்த்தியிருந்த வேலையாள்களை மற்றத் திட்டங்களிலும் அமர்த்தும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI P. KAKKAN : (a) The work is nearing completion.

(b) The workers employed by the contractors have been taken away by them to other projects under execution or disbanded, if not required. Action is being taken to absorb the maistries and operators employed departmentally in other projects to the extent feasible.

*University (Coimbatore)*

* 75 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to start a University in the Coimbatore district?

THE HON. SRI C. SUBRAMANIAM : No final decision has been taken regarding the starting of new Universities.

**SRI N. K. PALANISAMI :** கோயம்புத்தூரிலே, 2, 3 என்ஜினீயரிங் கல்லூரிகளும், கலாசாலைகளும், இன்னும் மருத்துவ கல்லூரி ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்ற காரணத்தினாலே, அங்கே பல்கலைக் கழகம் ஒன்றைத் துவங்க சர்க்கார் முன்வருவார்களா?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்போதே கனம் அங்கத்தினர் சங்கரன் அவர்கள் தன் கையைத் தூக்கிக் கொண்டு நிற்கிறார்கள். இதிலே இனி போட்டி இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஒரு சர்வகலாசாலை ஏற்படுத்துவது என்றால், யூனிவர்சிடி